Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS(C)P.P. 55



**உழைப்பு**

உழைப்பே செல்வம், உழைப்பாளர்க்கே உரிமையெல்லாம் உண்டு. உழைப்பாளிக்கே உலகம் உரியது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**மொழி**

எந்த ஒரு மொழியின் சிறப்பும் பெரும்பாலும் அம்மொழியின் மூலம் அறியக் கிடைக்கும் கருத்துக்களைப் பொறுத்துதான் அமையும்.

தந்தை பெரியார்



மலர் 8 சென்னை 28 - 2 - 1984 செவ்வாய் வெளியீடு 29 - 2 - 1984 புதன் இதழ் 133

## பாமாயில் சப்ளை: அரசு அறிவிப்பு

சென்னை, பிப். 28— சென்னை நகரம் மற்றும் அதன்புறநகர் பகுதிகளில் உள்ளநியாயவிலைக்கடைகளில் கார்டுதாரர்களுக்கு மாதம் ஒன்றுக்கு 2 கிலோ பாமாயில் அல்லது 2 மாதத்துக்கு ஒரு முறை 4 கிலோபாமாயில் வழங்கப்பட்டு வருகிறது.

ஆனால் தேவைப்படும் அளவுக்கு பாமாயில் சப்ளை இல்லாதகாரணத்தினால் இந்தஅளவுகளின்படி பாமாயில் கார்டுகாரர்களுக்குநியாய விலைக்கடைகள் மூலம் வழங்க இயலாத ஒரு நிலைமை ஏற்பட்டுள்ளது.

எனவே அனைத்துக் குடும்பக் கார்டுகளுக்கும் சமஅளவில் டின்களில் அடைக்கப்பட்ட பாமாயில் எண்ணெய் வழங்குவதற்கு தற்போது வழி செய்யப்பட்டுள்ளது

கடந்த டிசம்பர் மாதத்தில் இருந்து 4கிலோ டின் அல்லது 2 கிலோ டின்கள் கிடைக்கப்பெறாத கார்டுதாரர்களுக்குவரும்மாதத்துக்குள் வழங்கப்படும்

இவ்வாறு அரசு வெளியிட்டுள்ள ஒரு பத்திரிக்கைக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது

## நெல்லைமாவட்டத்தில் விவசாயக்கல்லூரி அமைக்க திட்டம்

### அமைச்சர் காளிமுத்து தகவல்

திருநெல்வேலி, பிப் 28 நெல்லை மாவட்டத்தில் ஒரு விவசாயக் கல்லூரியை அமைக்க அரசு பரிசீலித்து வருவதாக அமைச்சர் காளிமுத்து கூறினார்.

இந்தப் புதிய விவசாய கல்லூரி நெல்லை மாவட்டத்தில் கள்ளி குளத்தில் அமையும் என்றார்.

நெல்லையில் விவசாயத்துறை இணை இயக்குநர் அலுவலகத்திற்கு ரூ 15 லட்சம் செலவில் புதிய கட்டடம் கட்டப்பட உள்ளது.

இந்த புதிய கட்டடத்திற்கு அமைச்சர் காளிமுத்து அடிக்கல் நாட்டினார்.

அந்த விழாவில் அமைச்சர் காளிமுத்து பேசியதாவது:—

நெல்லைமாவட்டத்தில் கள்ளிகுளம் என்ற இடத்தில் ஒரு விவசாயக் கல்லூரி அமைப்பது குறித்து அரசுஆலோசித்து வருகிறது.

விவசாயவிளைபொருள் உற்பத்தியைப் பெருக்க பல்வேறு அபிவிருத்தி திட்டங்களை அரசு செயல் படுத்தி வருகிறது.

அதோடு விவசாயிகள் நலனில் அரசு அதிக அக்கறை காட்டி வருகிறது.

இவ்வாறு அமைச்சர்



காளிமுத்து கூறினார்.

இந்த விழாவில் அமைச்சர் யூசுப்பும் கலந்துக் கொண்டு பேசினார்

ரூ. 1.48 லட்சம் செலவில் கட்டப்பட்ட பருப்பு வகை கிடங்கை அமைச்சர் யூசுப் திறந்து வைத்தார்.

சுய வேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் 10 பேர்களுக்கு ரூ. 1.38 லட்சம் வங்கிக் கடனை வழங்கினார்.

கோவை வரும்

## செல்வி ஜெயலலிதா: சிறப்பான வரவேற்புக்கு ஏற்பாடு

கோவை, பிப். 28— கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதா கோவை மாவட்டத்தில் நாளை 29ம் தேதி மற்றும் மார்ச் 1ம்தேதி 2ம்தேதி ஆகிய நாட்களில் பல்வேறு கழக கூட்டங்களில் பங்கேற்று பேசுகிறார்.

கோவைக்கு வருகை தரும் கழக கொள்கை பரப்புச் செயலாளருக்கு கோவை ரயில் நிலையத்தில் பிருமாண்ட வரவேற்பு தரப்படுகிறது. இது குறித்து மாவட்ட அமைப்பாளர் கோவைத்தம்பி, எம்.எல்.ஏவும் மாவட்ட இணை செயலாளர் கே.வி. கந்தசாமி எம். எல். ஏ. வும் விடுத்துள்ள வேண்டுகோளில் கோவைக்கு வரும் கழக கொள்கை பரப்புச் செயலாளரை வரவேற்க கழக செயல் வீரர்கள், புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். மன்ற அடலேறுகள தொழிற்சங்க மாணவர், மகளிர் மற்றும் கழக பிற அமைப்பைச் சேர்ந்த அனைவரும் அலைகடலென திரண்டு கோவை ரயில் நிலையம் வருமாறு கேட்டுக்கொண்டுள்ளனர்.

## 15வயது வரை உள்ள சிறுவர்-சிறுமியர்கட்கும்

# சத்துணவுதர புதியதிட்டம்

## ரூ. 38 கோடி கூடுதல் செலவு; புரட்சிதலைவர்தீவிர ஆலோசனை

### அமைச்சர் சவுந்தரராசன் தகவல்



கோவை, பிப். 28- 15 வயது வரை உள்ள குழந்தைகளுக்கும் இலவச சத்துணவு வழங்கும் திட்டத்தை முதல்வர் புரட்சித்தலைவரின் அரசு பரிசீலித்து வருகிறது என்று அமைச்சர் சவுந்தரராசன் கூறினார்.

2 வயது முதல் 10வயது வரை உள்ள 70 லட்சம் குழந்தைகளுக்கு புரட்சித் தலைவர் அரசு சத்துணவு வழங்கி வருகிறது அல்லவா? இதற்கு வருடத்திற்கு ரூ 140 கோடி செலவாகிறது.

15 வயது வரை உள்ள ஏழை குழந்தைகளுக்கும் இலவச சத்துணவு அளிக்க முதல்வர் புரட்சித் தலைவர் விருப்பம் தெரிவித்திருந்தார்.

இது பற்றி கோவையில் நிருபர்களுக்கு பேட்டி அளித்த சத்துணவுத் துறை அமைச்சர் சவுந்தரராசன் கூறியதாவது:

15 வயது வரை உள்ள குழந்தைகளுக்கும் சத்துணவு வழங்க புரட்சித் தலைவர் அரசு ஆலோசித்து வருகிறது.

10க்கு மேல் 15வயதுக்குள் எத்தனை குழந்தைகள் உள்ளனர்? அவர்களுக்கும் சத்துணவு வழங்கினால் எவ்வளவு செலவாகும் என்ற புள்ளி விவரங்களை சேகரிக்குமாறு மாவட்ட அதிகாரிகளை அரசு கேட்டுக் கொண்டுள்ளது. அந்த விவரங்கள் கிடைத்ததும் இறுதி முடிவு எடுக்கப்படும்.

சத்துணவு திட்டம் விஸ்தரிக்கப்பட்டால் மேலும் சுமார் ரூ. 38 கோடி கூடுதல் செலவு ஆகும்.

பிரதமர் இந்திரா அறிவித்த20 அம்சதிட்டத்தில் ஏழைக் குழந்தைகளுக்கு உணவு அளிப்பதும் ஓர் அம்சமாகும். எனவே புரட்சித் தலைவர் செயல்படுத்தும் சத்துணவு செலவை திட்ட செலவாக மத்திய அரசு ஏற்று இதற்கு நிதி உதவி செய்ய முன்வரும் என்று நம்புகிறோம்.

இவ்வாறு அமைச்சர் சவுந்தரராசன் கூறினார்.

★ பிணங்களை மறைக்க செய்த முயற்சிகள் ★ முக்கிய தடயங்கள் போலீசிடம்சிக்கின

★ நரசிம்மன் குடும்பத்தை கூண்டோடு ஒழிக்க போட்ட சபதம்

### விருகம்பாக்கம் கொலை: திடுக்கிடும் தகவல்கள்

# 9 பிணங்களுடன் 2 நாட்கள் தங்கி இருந்த கொலையாளி

**சென்னை. பிப். 28. சென்னையைஅடுத்த விருகம்பாக்கத்தில் 9பேர் கொலையுண்டது பற்றிய திடுக்கிடும் தகவல்கள் வெளியாகி உள்ளன பிணங்களுடன் 2நாட்கள் தங்கியிருந்ததாக கூறப்படும் கொலையாளியை பிடிக்க போலீசார் தீவிர நடவடிக்கைஎடுத்துவருகின்றனர்**

சென்னை விருகம்பாக்கம் பழனியப்பா நகரில் நடந்த 9 பேர் பயங்கர படுகொலையில் பல திடுக்கிடும் தகவல்கள் கிடைத்துள்ளன.

பழனியப்பா நகரில் பூட்டி இருந்த வீட்டினுள் 9 பேர் படுகொலையுண்டு கிடந்தது நேற்று கண்டு பிடிக்கப்பட்டதுதெரிந்ததே.

பழனியப்பா நகரில் நரசிம்மன் (வயது 35) என்பவர் குடி இருந்து வந்தார். இவர் ஒரு பிளாஸ்டிக் தொழிற்சாலை நடத்தி வந்தார்.

இவரது மனைவி தேசிகராணி வயது 18 நரசிம்மனின் தம்பி மணிவயது30. மணியின் மனைவி ராணி வயது 25 நரசிம்மனின் மற்றொரு தம்பி ஆறுமுகம் வயது 22.

நரசிம்மனின் 6 மாத ஆண் குழந்தை.

மணியின் 6 வயது பெண் செல்வி.

மணியின் மற்றொருஒரு வயது குழந்தை கவிதா.

பிளாஸ்டிக் தொழிற்சாலையில் வேலை பார்த்து வந்த சேகர் வயது 23. ஆகிய 9 பேர் பயங்கரமாக கொலை செய்யப்பட்டுக் கிடந்தனர்.

இத்தக் கொலை தொடர்பாக நரசிம்மனின் மைத்துனர் அதாவது நரசிம்மனின் மனைவிதேசிகராணியின் அண்ணன் ஜெயப்பிரகாஷ் தேடப்பட்டு வருகிறார். இவர் தலைமறைவாகியிருப்பதாக சொல்லப்படுகிறது.

இந்த ஜெயப்பிரகாஷும் நரசிம்மனது தொழிற்சாலையில் வேலை பார்த்து வந்ததாக சொல்லப்படுகிறது.

இந்த ஜெயப்பிரகாஷ் பி. எஸ். சி. வரை படித்தவராம். ஆனால் தேர்வு பெறாதவர்.

இவர் அந்த பிளாஸ்டிக் தொழிற்சாலையில் சரியாக வேலை செய்யாமல் இருந்ததாக சொல்லப்படுகிறது. அதோடு ஜெயப்பிரகாஷுக்கு பல கெட்ட பழக்கங்கள் உண்டாம். அடிக்கடி பல ஆங்கிலப் படங்களுக்குச் செல்வாராம்.

காபரே டான்ஸ் நிகழ்ச்சிகளுக்கு செல்வாராம். மசாஜ் நிலையம் செல்வது கூட இவரது வாடிக்கையான வேடிக்கை பழக்கமாம்.

### ஆடம்பர செலவு

தனது ஆடம்பர செலவுகளுக்கு தனது தங்கை அதாவது நரசிம்மனின் மனைவியிடம் அடிக்கடி பணம் கேட்டு தொந்தரவு செய்து வந்ததாகக் கூறப்படுகிறது.

தண்டச்செலவு செய்து கொண்டு கண்டபடி அலைந்து வந்த ஜெயப்பிரகாஷ் சரியாக வேலையும் செய்வதில்லை.

இதனால் நரசிம்மனும் அவரது மனைவியும். நரசிம்மனது தம்பிகளும் கண்டபடி திட்டுவார்களாம்.

இப்படி இவர்கள் திட்டி வந்ததால் நரசிம்மன் குடும்பத்தையே கூண்டோடு ஒழித்துக் கட்டுகிறேன் என்று ஜெயப்பிரகாஷ் வெளிப்படையாகவே பலரிடம்சொல்லிசபதமும் செய்ததாக சொல்லப்படுகிறது.

சிலதினங்களுக்கு முன்பு இவர்கள் ஜெயப்பிரகாஷை மிகவும் கடுமையாக திட்டியதாகவும் தண்டச் செலவு செய்து கொண்டு தடிமாடாக திரிகிறாயே என்று கேட்டனராம்.

இதனால் மிகவும் ஆத்திரமடைந்த ஜெயப்பிரகாஷ், நரசிம்மன் குடும்பத்தை கூண்டோடு அழித்து ஒழிக்க ஒரு திட்டத்தை தீட்டியதாக சொல்லப்படுகிறது.

### உணவில் மயக்க மருந்தா?

இரவு அனைவரும் சாப்பிடும்போது சாப்பாட்டுப் பொருளில் சயனைடு போன்ற மயக்க மருந்தை கலந்து இருக்கக்கூடும் என்று கருதப்படுகிறது.

இதன் மூலம் அனைவரும் லேசான மயக்கம் அடைந்திருக்கக்கூடும்.

இதன்பிறகு இவர்களுக்கு மயக்கம் தெளிவதற்கு முன்சிரிஞ்ச் மூலம் விஷமருந்தை ஏற்றி இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

இப்படி ஊசி மூலம் விஷம் ஏற்றப்படும்போது சிலர் திமிறி இருக்கலாம் என்று சொல்லப்படுகிறது.

ஆண்கள் இருவரை கழுத்தை நெறித்துக் கொன்று இருக்கக்கூடும்.

மற்றும் இருவரது முகத்தில் துணியை வைத்து அழுத்தி மூச்சுத்திணறவைத்திருக்கக்கூடும் என்றும் கருதப்படுகிறது.

இருவரது கழுத்திலும் நெஞ்சிலும் கத்தியால் குத்திக் கொன்று இருப்பதாகவும் கருதப்படுகிறது.

ஒரு சின்னக் குழந்தையின் கழுத்து அப்படியே பின்பக்கம் திருப்பப்பட்டு இருக்கிறது.

சில்லரைஉருட்டுக்கட்டை மூலம் அடித்தும் கொன்று இருக்கக்கூடும் என்று கருதப்படுகிறது.

ஒரு வழியாக ஈவுஇரக்கமின்றி அரக்கத்தனத்துடன் 9 பேர்களையும் ஒழித்துக் கட்டிய பிறகு அந்த பிணங்களோடேயே ஜெயப்பிரகாஷும் இரண்டு நாள் தங்கி இருந்ததாக சொல்லப்படுகிறது.

இதன் பிறகு பிணங்களின் மீது இருந்து நாற்றம் வீச ஆரம்பித்து விட்டது.

எப்படியாவது இந்

(2-ம்பக்கம்பார்க்க)

## நீலகிரி மாவட்டத்தில் ரூ. $3\frac{1}{2}$ கோடியில் பால்பெருக்கு திட்டம்

### முடிவடையும் நிலையில் உள்ளதாக அமைச்சர் கே. ஏ. கே. பேச்சு

கோவை பிப். 28 நீலகிரி மாவட்டத்தில் 3 கோடியே 50லட்ச ரூபாய் செலவில் திட்டமிடப்பட்ட பால் பெருக்குத் திட்டம முடிவடையும் நிலையில் உள்ள தாக அமைச்சர் கே.ஏ.கே கூறினார்.

கோவை மாவட்ட கூட்டுறவு பால் உற்பத்தியாளர் ஒன்றியத்தின் 2 ம் பால் பெருக்குத் திட்டத்தின் கீழ் புதிய பால் பண்ணைக்கு அடிக்கல் நாட்டு விழாபேரூர் அருகில்உள்ள தொண்டாமுத்தூர் தொகுதி பச்சாபாளையம் பிரிவில் நடைபெற்றது கோவை மாவட்ட கூட்டுறவு பால் உற்பத்தியாளர் ஒன்றிய பெருந் தலைவர் க. மருதாசலம் தலைமை வகித்து வரவேற்று பேசினார்.

விழாவில் கலந்து கொண்டு கோவைத்தம்பி எம்.எல்.ஏ.சின்னராசுஎம் எல்.ஏ. ஆகியோர் பேசினார்கள் திட்ட அடிக்கல் நாட்டு விழாவில் தமிழக பால் வளத்துறை அமைச்சர் கே.ஏ.கே.பேசியதாவது:

ஐந்தாண்டுத் திட்டத்தில் தமிழகத்தில் 2-வது பால் வளப் பெருக்கு திட்டத்திற்கு 42 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டு செயலாற்றி வருகின்றோம். மூன்று ஆண்டுகளில் 7 லட்சம் லிட்டரிலிருந்து 14லட்சம் லிட்டராகபால் பதப்படுத்தப்படும் திட்டத்தைப் பெருக்கத் திட்டமிட்டு செயல்பட்டு வருகிறோம்.

நீலகிரி மாவட்டத்தில் ரூ. $3\frac{1}{2}$ கோடி செலவில் 1981-ல் பால் பெருக்குத்திட்



டத்திற்கு அடிக்கல் நாட்டப்பட்டு இன்று முடியும் நிலையில்உள்ளது அநேகமாக மே அல்லது ஜூன் மாதத்தில் திறப்பு விழா நடைபெறும். அங்கு தமிழகத்திலேயே முதன் முதலாக பாலாடைக் கட்டி செய்யும் யூனிட் உருவாகி வருகின்றது. இங்கு 36 ஆயிரம்லிட்டர் பால் பதப்படுத்தப்பட்டு அங்குள்ள தேவை போக மீதி சென்னைக்கும் அனுப்பப்பட்டு வருகின்றது.

விவசாயிகள் பால் விநியோகத்தில் தனியாரை நம்பி இருப்பதால் நியாயவிலை கிடைப்பதில்லை. கால்

(6-ம் பத்தி பார்க்க)

8-ம் பத்தி தொடர்ச்சி

நடை எண்ணிக்கையை அதிகரிக்கவும் பால் உற்பத்தி திறனை அதிகரிக்கச்செய்யவும் கட்டுப்படியாகும் விலை கிடைக்கவும் இத்திட்டத்தால் பயன் ஏற்படுகின்றது.

இவ்வாறு அமைச்சர் கே. ஏ கே. பேசினார்.

நிகழ்ச்சியில் அமைச்சர்கள் அரங்கநாயகம், குழந்தை வேலு ஆகியோரும் பங்கேற்று பேசினர். மாவட்டக் கலெக்டர் பாஸ்கரதாஸ். கோவை பால் உற்பத்தியாளர் ஒன்றிய நிர்வாக இயக்குனர் ஜேசுவரிநாதன் ஆகியோர் நிகழ்ச்சியில் பங்கேற்றனர்.

"எண்ணங்கள் சில"

# செல்வி ஜெயலலிதா எழுதிய புத்தகம்: 'இந்து' ஏடு பாராட்டு

## "மீண்டும் மீண்டும் படிக்கத் தூண்டும் மேலான எழுத்து"

கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதா எழுதிய எண்ணங்கள் சில புத்தகத்திற்கு இந்து ஏடு எழுதியுள்ள விமர்சனம் வருமாறு:-

**ENNANGAL SILA: By Jayalalitha. Published by Kavitha Banu, 54, Portuguese Church Street, Madras-600 001.**

**Price Rs. 9.**

One would like to have seconds on this rich food for thought, a marriage of form and content. Film star Jayalalitha was equal to the assignment given her by a political fortnightly to write on topics that would stimulate public conscience. With the world of books and periodicals as her oyster, she wrote without fear or favour. The inquiring reporter in her made her argue any important incident or subject of topical interest with great learning and logic. The choice collection of such writings has been brought out in this book. For instance, she streamlines Kanchi Acharya's reference in eulogy of the ancient practice of Varakkatna (compensation to the bride's party for condescending to give her in marriage) now trampled to death by the obnoxious dowry system when, ironically enough, the modern husband has also scope to augment his income with his wife's earnings. She takes up cudgels for maintaining ethics in the medical profession citing an instance of gross callousness. The investigative reporting and astute comments cover subjects on a wide canvas.

**P. SUNDARESAN**
Hindu :
Dated : 28-2-84

'இந்து' விமர்சனத்தின் தமிழாக்கம் வருமாறு:

வடிவமும் வண்ணமான பொருள் அடக்கமும் கலந்துநிரவியசிந்தனைக்கு விருந்தாகிற செல்வி ஜெயலலிதாவின் சிறந்த இந்த எழுத்தோவியத்தைப் படிக்கிற ஒருவரை மீண்டும்மீண்டும் இதுபடிக்க வைக்கும்.

திரைப்பட நட்சத்திரமாக இருந்தபோதே செல்விஜெயலலிதாஅவர்கள் ஒரு அரசியல் மாதமிருமுறை பத்திரிகை கேட்டுக் கொண்டதற்கு இணங்க மக்களின் மனசாட்சியை தட்டி எழுப்பத்தக்க பல்வேறு தலைப்புகளின் கீழ் எழுதுவதற்கு தான் மிகப் பொருத்தமானவர் என்பதைநிரூபித்திருக்கிறார்கள் புத்தகங்களையும், சஞ்சிகைகளையும் கருமணிச் சிப்பி போல விருப்பத்தோடு காத்து வருகின்ற செல்வி ஜெயலலிதாஅவர்கள்இந்தநூல்முழுவதிலும் எழுத்தில் அச்சமோ அரவணைப்போ இல்லாமல் அணுகி இருக்கிறார்கள்.

உள்மனத்தில் அடங்காத ஆய்வு உணர்வோடு எழுதுகிற ஒரு பத்திரிகையாளராக செல்வி ஜெயலலிதா இருப்பதால் முக்கியமான நிகழ்ச்சிகளையும் விருப்பத்தைத் தூண்டுகிற தலைசிறந்த செய்திகளையும் அவர்களால் தர்க்கவாத உணர்வோடு எடுத்து வைக்க முடிகிறது.

இப்படிப்பட்ட வாதங்களில் அவர்களது ஆழ்ந்த கல்விப்புலமை, தத்துவ அறிவு இவைகள் வெளிப்படுகின்றன. இம்மாதிரியான சிறந்த கட்டுரைகளின் சீரிய தொகுப்பே 'எண்ணங்கள் சில' என்கிற இந்த நூலாகும்.

சான்றாகபுராதனவழக்கமான வரன் கட்டணம் பற்றி அருள்மிகு காஞ்சி ஆச்சார்ய சுவாமிகள் பலபடப் பாராட்டிப் பேசுகிறார். (வரன்கட்டணம்) என்பது பெண் வீட்டாருக்கு அவளைத் திருமணம் பண்ணிகொண்டுபோவதற்காகமாப்பிள்ளைவீட்டார் தருகிற நட்ட ஈடு போல விளங்கும் நிரவல் ஈட்டுத் தொகை ஆகும்.

இந்த வழக்கமே பிற்காலத்தில் பெண் வீட்டார் தருகிற மோசமான சீதனமுறையால் சாகடிக்கப்பட்டிருக்கிறது. இப்போது வேதனை கலந்த கேலிக்கு இடமாகிற விதத்தில் நவீன கணவன்மார் சீதனமும் பெற்றுக் கொண்டுமனைவியின் சம்பாத்தியத்தின் மூலம் தங்களது வருமானத்தையும் பெருக்கிக் கொள்ள முடிகிறது. இவற்றைப் பற்றி செல்வி ஜெயலலிதா அவர்களின் கருத்துக்கள் அழுத்தமாக ஆழமாக நேர்பட, நிரல்பட இந்தப் புத்தகத்தில் காணப்படுகின்றன.

மருத்துவத் தொழிலில் கடைப்பிடித்தே ஆக வேண்டிய நல்லொழுக்க நெறிகளுக்காக இந்த நூலில்செல்விஜெயலலிதா கதாயுதம்தாங்கிப் போராடுபவராகக் காட்சி தருகிறார். தனது எழுச்சிமிக்கப் போராட்டத்திற்குச் சான்றாக ஈரமில்லாத இரக்கமில்லாத ஒரு நிகழ்ச்சியை முன் நிறுத்தி செல்வி ஜெயலலிதா அவர்கள் வாதாடுகிறார்கள்.

பரந்தும் படர்ந்தும் தெரிகிற பல்வேறுமனிதர்கள், நிகழ்ச்சிகள் இவைகளைப்பற்றி செல்வி ஜெயலலிதா எழுதுகிற போது அவர்களது 'நுண்மாண் நுழை புல' உள்ளமும் நிறைகுறைகளைச் சுட்டி காட்டுகிற நேர்த்தியான விமர்சனக் குறிப்புக்களும் புத்தகம் முழுவதிலும் நிறைந்துகாணப்படுகின்றன

எண்ணங்கள் சில
எழுதியவர்:
**செல்வி ஜெயலலிதா**
வெளியிட்டது:
**கவிதா பானு**
54, போர்ச்சுக்கீசியர் மாதா கோவில் தெரு,
சென்னை-1
**விலை ரூ. 9-00**

---

# நாளை ஈரோடு

## கலை கல்லூரி விழா: அமைச்சர் எஸ். டி. எஸ் பேசுகிறார்

ஈரோடு, பிப். 28-நாளை (29-ந்தேதி) காலை 10 மணி அளவில் ஈரோடு கலைக் கல்லூரியில் கல்லூரி பேரவை நிறைவு விழா நடைபெறுகிறது.

விழாவில் அமைச்சர் எஸ். டி. எஸ். பங்கேற்று மத்திய, மாநில உறவுகள் குறித்து சிறப்புரை ஆற்றுகிறார். அமைச்சர் முத்துசாமி தலைமையில் நடக்கும் இவ்விழாவில்மொடக்குறிச்சி பாலகிருஷ்ணன் எம். எல். ஏ. வெங்கட சுப்பிரமணியம் எம். எல். ஏ. மற்றும் மாவட்ட ஆட்சித் தலைவர் ராசாராம் ஆகியோரும்பங்கேற்கின்றனர்.

---

இன்று மாலை
83-வது வட்டத்தில்

## சிறப்பு பிரதிநிதி எட்மண்ட் பேசுகிறார்

சென்னை, பிப். 28-இன்று மாலை 7 மணி அளவில் 83 வது வட்டக் கிளை சார்பில் அம்பேத்கார் திடலில் பிருமாண்டமான கழக பொதுக் கூட்டம் நடைபெறுகிறது. மோகன் தலைமையிலும், பி. சுப்பிரமணி கே. ராஜன், ஜனார்த்தனன் முன்னிலையிலும், திலகராஜ், தேவதாஸ், முருகேசன் வரவேற்பிலும் நடைபெறும் இக்கூட்டத்தில் டெல்லி சிறப்பு பிரதிநிதி ஜி. ஆர். எட்மண்ட், வண்ணை கோவிந்தன், எஸ் ஏ. ராஜபாண்டியன், மா. சு. மணி, க. தெய்வசிகாமணி, வெற்றிச்செல்வன், சிம்சன் பழனி எம்.ஏ. பழனி, மற்றும் பலர்பேசுகின்றனர். எஸ். குமார் நன்றி கூறுகிறார்.

---

கணவன்மனைவிதகராறு:

## இளம் பெண் தூக்கிட்டு தற்கொலை

சென்னை, பிப். 28-கணவன் மனைவிக்கிடையே தகராறில் மனமுடைந்த மனைவி தற்கொலை செய்து கொண்டுள்ளார். இது பற்றிய விவரமாவது:-

பழவந்தாங்கல், கருணாநிதி நகரில் வசிப்பவர் பார்த்திபன் இவர்கூலி வேலை பார்த்து வந்தாராம் இவர் யாசின் பேகம் என்பவரை கடந்த 2½ ஆண்டுகளுக்கு முன் காதலித்து மணமுடித்தாராம்.

பார்த்திபனுக்கும், பேகத்திற்கும் அடிக்கடி தகராறு வருமாம். இதனால் மனமுடைந்த பேகம் வீட்டிலேயே தூக்கிட்டு தற்கொலை செய்து கொண்டாராம்.

இது தொடர்பாக பரங்கிமலை போலீசார் விசாரித்து வருகின்றனர்.

---

## கோதுமை உணவு சாப்பிட மத்திய அமைச்சர் வேண்டுகோள்

புதுடெல்லி, பிப். 28-நாடாளுமன்றத்தில் கள்வி நேரத்தின்போது பாலானந்தன் (மார்க்சிஸ்ட்) கேள்விக்கு பதிலளிக்கையில் கேரளாவுக்கு கூடுதல் அரிசி சப்ளைசெய்ய முடியாது என்று உணவுத்துறை அமைச்சர் பகவத்ஜா ஆசாத் கூறினார்.

அரிசியைவிடகோதுமை அதிகம்உற்பத்தியாகிறது. எனவே அதிக அளவில் கோதுமை உணவு சாப்பிடும்பழக்கத்தை மேற்கொள்ளவேண்டும். பர்மா, தாய்லாந்து ஆகிய நாட்டிடம் அரிசி வாங்கி உள்நாட்டு தேவைகளை நிறைவேற்றிவிட முடியாது என்றும் அமைச்சர் கூறினார்.

---

## விருகம்பாக்கம் கொலை...

(முதல் பக்கத் தொடர்ச்சி)

தப் பிணங்களை மறைத்து விடலாம் என்று கருதியதாகசொல்லப்படுகிறது.

இந்தக் காரியத்தைச் செய்து முடிக்க ஜெயப்பிரகாஷ் நுங்கம்பாக்கம் சென்றாராம்.

அங்கேமணி என்ற ஒரு கொத்தனாரை கொலை நடந்த வீட்டுக்கு அழைத்து வந்தாராம்.

மணிக்கு வயது 40 இருக்கும். அவரிடம் ஜெயப்பிரகாஷ் இந்தப் பிண விவகாரங்களை சொல்லாமல் வீட்டுக்குள் லெட்ரின் டிரெயினேஜுக்கு குழிதோண்ட வேண்டும் என்று சொல்லி இருக்கிறார்.

வந்த மணியோ வீட்டுக்குள் பள்ளம் எதற்கு? வெளியே தானே பள்ளம் தோண்ட வேண்டும் என்று சொல்லி இருக்கிறார்.

### மணி கேட்ட கேள்வி

அதோடு மணி சும்மா இருந்து விடவில்லை. மூக்கை கசக்கத் தொடங்கி ஏதோ நாற்றம் வீசுகிறதே என்ன நாற்றம் என்று கேட்டாராம்.

அதற்கும்ஒருரெடிமேட் பதிலை ஜெயப்பிரகாஷ் கூறினாராம். வீட்டுக்குள்ளே எலி ஒன்று செத்துக் கிடக்கிறது. அது எங்கே என்று தெரியவில்லை. அதன் நாற்றம்தான் அடிக்கிறது என்று ஒருசமாதானத்தை சொல்லி இருக்கிறார்.

ஆனால் மணியோ குழி வெட்டாமல் சென்று விட்டார்.

அந்த வீட்டில் அதற்கு மேல் இருந்தால் தனக்கு ஆபத்து என்று ஜெயப்பிரகாஷ் கருதி இருக்கக் கூடும்.

நரசிம்மன் பயன்படுத்திய மோட்டார் சைக்கிள் வீட்டில்இருந்தது டி. எம். ஜே 59 35 என்ற அந்த வண்டியில்பறந்துவிட்டார் எங்கு போனார் என்ற விவரம் யாருக்கும் தெரியவில்லை.

ஜெயப்பிரகாஷின் சொந்த ஊர் தர்மபுரி மாவட்டத்தில் வெள்ளிச்சந்தை என்ற கிராமம் ஆகும்.

ஜெயப்பிரகாஷ் அவரது தங்கை தேசிகராணியின் தந்தை பெயர் கோவிந்தசாமி.

இவர் நேற்று காலை மகளைப்பார்க்க வந்தபோது வீடு பூட்டிக் கிடந்தது.

தொழிற்சாலையும் பூட்டிக்கிடக்கவே சந்தேகம் வர வீட்டைச் சுற்றி வந்தபோது நாற்றம் வரவே சந்தேகப்பட்டார்.

பிறகு போலீசார் வந்து கதவை உடைத்து பிணக் குவியலைக்கண்டு திடுக்கிட்டனர்.

நெஞ்சை உருக்கும் வகையில் 9 பேர் பயங்கரமாகபடுகொலையானவிவரம் தெரிந்தபோது அந்தப் பகுதி மக்கள் அதிர்ச்சி அடைந்தனர்.

### புலன் விசாரணை

இந்த பயங்கர கொலைகளைச் செய்த கொலையாளியைப் பிடிக்க ஒரு விசேஷ போலீஸ் படை அமைக்கப்பட்டு புலன் விசாரணை வேலைகள் துரித வேகத்தில் நடந்து வருகின்றன.

ஜெயப்பிரகாஷின் சொந்த ஊரான வெள்ளிச்சந்தைக்கு போலீசார் விரைந்து சென்றனர்

அங்கே அவரதுவீட்டில் இருந்து பல முக்கிய கடிதங்களையும் போலீசார் கைப்பற்றி இருக்கிறார்கள்.

இங்கே விருகம்பாக்கம் வீட்டில் நடந்த தகராறுகள், நரசிம்மன் குடும்பத்தினர் திட்டிய நிகழ்ச்சிகள் பற்றியெல்லாம் ஜெயப்பிரகாஷ் தனது தந்தைக்கு எழுதியகடிதங்கள் தான் அவைகள்என்று கருதப்படுகிறது.

கொலை நடந்த வீட்டை செங்கை மாவட்ட கிழக்கு சூப்பிரண்டு ரமணன் பார்வையிட்டார்.

இன்ஸ்பெக்டர்கள் தருமன், மனோகரன், செல்வின் ஆகியோர் உடன் சென்றனர்.

கைரேகை நிபுணர்களும் வந்திருந்தனர்.

கைரேகை ஏதாவது பதிந்து இருக்கிறதா என்று பரிசோதித்தனர்.

வீட்டில் இருந்த தட்டுமுட்டு சாமான்கள் எல்லாம் கைப்பற்றப்பட்டுள்ளன, அவைகளில் கைரேகை தடயம் கண்டு பிடிக்கப்படுகிறது.

ரத்தத்துளிகள் ஏதாவது எங்காவது இருக்கிறதாஎன்றும் சோதனையிட்டனர்.

விஷஊசி மருந்து பாட்டில் எங்காவது இருக்கிறதாஎன்றும் சோதனை போட்டு வருகின்றனர்.

கிணற்று தண்ணீரில் ஏதாவது மயக்க மருந்து கலக்கப்பட்டு இருக்குமா என்பதைக் கண்டறிய கிணற்று நீரை ஆய்வுக்கு அனுப்பி இருக்கிறார்கள்.

இந்தக் கொலைகள் குறித்து ஜெயப்பிரகாஷின் தந்தை மற்றும் கொத்தனார் மணி, வீட்டுச் சொந்தக்காரர் ஆகியோரிடம் போலீசார் தீவிரமாக விசாரித்து வருகின்றனர்.

நரசிம்மன் குடி இருந்த வீடு வாடகை வீடு. அந்த வீட்டுச் சொந்தக்காரர் பல்லவன் டிரைவர்.

இவர்களை போலீசார் விசாரித்து வருகின்றனர்.

கொலையுண்ட 9 பேர்களின் உடல்களும் அரசு பொது மருத்துவ மனைக்கு கொண்டுவரப்பட்டுள்ளது.

மருத்துவமனையில் பிரேத பரிசோதனை நடந்து வருகிறது. இந்த சோதனை இன்று மாலை முடியும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

எப்படியும் குற்றவாளி விரைவில் பிடிபட்டுவிடுவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

---

## சுப்ரீம்கோர்ட்டில் 73 ஆயிரம் வழக்குகள் தேக்கம்

புதுடெல்லி, பிப். 28. சுப்ரீம் கோர்ட்டில் 1983 டிசம்பர் 31ந் தேதி வரை மொத்தம் 73ஆயிரத்து 205 வழக்குகள் பைசல் ஆகாமல் தேங்கிக்கிடந்தன. இவை தவிர பல்வேறு பட்ட சிவில், கிரிமினல் மனுக்கள் 63,107 தேங்கிக் கிடக்கின்றன. இந்தத் தகவலை மாநிலங்களவையில் சட்ட அமைச்சர் கவுசல் தெரிவித்தார்.

உயர் நீதி மன்றங்களைப் பொறுத்த வரை அலகாபாத் உயர் நீதி மன்றத்தில் அதிக பட்சமாக 1,85,842 வழக்குகள் தேங்கிக் கிடக்கின்றன. அடுத்து கர்நாடக உயர் நீதி மன்றத்தில் 1,24,465 வழக்குகள் தேங்கிக் கிடக்கின்றன என்றும் கவுசல் கூறினார்.

---

மின் இணைப்பில் ஏற்பட்ட

## தீ விபத்து: தாயும் 4 குழந்தைகள் கருகி சாவு

திருச்சி. பிப். 28-மின் இணைப்புக் கோளாறால் ஏற்பட்ட தீ விபத்து ஐந்து உயிர்களைப் பலி கொண்டது. இந்த பரிதாபகரமான சம்பவம் திருச்சி அருகே நடந்துள்ளது.

திருச்சியில் இருந்து 50 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஈலுருபட்டி கிராமம். அந்த கிராமத்தில் உள்ள ஒரு வீட்டில் தீப்பிடித்தது

வீட்டில் இருந்தவர்கள் தூங்கிகொண்டு இருந்தனர் மின் இணைப்பு கோளாறால் தீ பரவியது வீட்டுக்குள் இருந்தவர்கள் அலறி துடித்து அழுதனர்.

அழுகை சத்தம் கேட்டு கிராம மக்கள் ஓடிவந்து மின் இணைப்பை துண்டித்தனர்.

அதற்குள் வீட்டில் இருந்த தாயும் அவரது 4 குழந்தைகளும் இறந்து விட்டன.

அவரது கணவரும் மற்றும் இரு குழந்தைகளும் தீக்காயங்களுடன் மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

---

தேச ஒற்றுமைக்கு விரோதமாக
செயல்படும் கட்சிகளுடன்

# எந்தவித தொடர்பும் வைத்துக் கொள்ள மாட்டோம்

## மார்க்சிஸ்ட் கட்சி நிலை பற்றி ஈ. எம். எஸ். நம்பூதிரிபாட் அறிவிப்பு

கோழிக்கோடு, பிப் 28-தேச ஒற்றுமைக்கு விரோதமாக செயல்படும் எந்த ஒரு அமைப்புடனும் உறவு கொள்ளமாட்டோம் என மார்க்சிஸ்ட் கட்சி பொதுச் செயலாளர் நம்பூதிரிபாட் கூறியுள்ளார்.



தீயசக்திகள் இந்திரா காந்தியை தோற்கடிப்பதையே லட்சியமாக கொண்டவை. கண்மூடித்தனமான இந்தக் கொள்கையை பின்பற்றி ஆபத்தானவர்களுடன் கூட்டு சேரமாட்டோம் எனவும் நம்பூதிரிபாட் கூறியுள்ளார்.

இந்தியஜனநாயக வாலிபர் சங்கத்தின் மாநாட்டினையொட்டி கோழிக்கோடு ஸ்டேடியம் மைதானத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் மார்க்சிஸ்ட்கட்சியின்பொது செயலாளர் ஈ.எம்.எஸ். நம்பூதிரிபாட் கலந்து கொண்டு பேசியதாவது:-

அமெரிக்க ஏகாதிபத்தியத்தின்யுத்தக் கொள்கை மனித குலத்திற்கே ஆபத்தானதாகும். சோஷலிசத்தை அழிப்பது என்ற இந்தக்கொள்கை இந்தியா உள்பட மூன்றாவது உலக நாடுகளுக்குப் பெரும் அச்சுறுத்தலாகும். அதற்கு எதிரான போராட்டத்தில் இந்திரா காந்தி பின்பற்றுகின்ற கொள்கைகள் வரவேற்கத்தக்கவை. இதை மார்க்சிஸ்ட் கட்சி ஆதரிக்கும்.

உண்மையில் அமெரிக்க ஏகாதிபத்தியக் கொள்கைகளை எதிர்த்திடும் இந்திராகாந்திக்கு மார்க்சிஸ்ட் கட்சி துணை நிற்கும்.

ஏகாதிபத்திய எதிர்ப்புக் கொள்கையைபலப்படுத்த வேண்டும். இதற்குளங்கள் கட்சி டாடபடும்.

இந்தப் பிரச்னையில் பிரதமர் இந்திரா காந்தி மிக உறுதியான நிலை எடுத்தால் அது சர்வதேச சமாதானஇயக்கத்திற்கு மிகவும் ஊக்கமளிப்பதாகும்.

ஆகவே இந்தியாவில் வளர்ந்து வருகின்ற விரிவான சமாதான இயக்கத்தில் அனைவரும் பங்கேற்க வேண்டும்.

### பொதுப்பிரச்னை ஒன்றுபடுவது நல்லது

அமெரிக்க ஏகாதிபத்தியக் கொள்கைகளை எதிர்ப்பவர்களை இந்திராகாந்தியின் பாதந்தாங்கிகள் என்று வாஜ்பாயி சொல்வது கண்டனத்திற்குரியது. பொதுப் பிரச்சினையில் ஒன்றுபடுவதுதான் நாட்டிற்கு நல்லது.

### தீய சக்திகளை ஒடுக்குவீர்

நாட்டின் பிரிவினைவாத, குழப்பவாத,வகுப்புவாத சக்திகளை ஒடுக்க வேண்டும்.

தேசஒற்றுமையைகாக்க வேண்டும். இதில் மார்க்சிஸ்ட் கட்சி எச்சரிக்கையுடன் செயல்படும் ஒற்றுமைக்கு விரோதமான எந்த ஒரு அமைப்புடனும் உறவு கொள்ள மாட்டோம்.

தீய சக்திகள் இந்திரா காந்தியை தோற்கடிப்பதையே லட்சியமாகக் கொண்டவை.

கண்மூடித்தனமான இந்தக் கொள்கையைப் பின்பற்றி, ஆபத்தானவர்களோடு கூட்டு சேரமாட்டோம். தேர்தல் வருகிறபோது எங்கள் கட்சி எந்த அணியில் செயல்படுவது என்பதை உறுதியாக முடிவு செய்வோம்.

இவ்வாறு ஈ. எம். எஸ். நம்பூதிரிபாட் பேசினார்.

---

குடிசைப் பகுதி
மாற்று வாரிய
ஊழியர் குடும்பத்திற்கு

## ரூ.10 ஆயிரம் நிதியுதவி சுலோசனா சம்பத் வழங்கினார்

சென்னை, பிப். 28-தமிழ்நாடு குடிசைப் பகுதி மாற்று வாரியத்தில் பணியாற்றி, அயோத்தியா குப்பம் திட்டப் பகுதியில் பாதாள சாக்கடை அடைப்பை நீக்கும் பொருட்டு இறங்கிய போது விஷவாயு தாக்கி மரணமடைந்த தமிழ்நாடு குடிசைப் பகுதி மாற்று வாரிய ஊழியர் ஆறுமுகத்தின் மனைவி திருமதி சரோஜாவிற்கு தமிழ்நாடு குடிசைப்பகுதி மாற்று வாரியத் தலைவர் சுலோசனா சம்பத் குடும்ப நலத் தொகையான ரூ 10,000-க்கான காசோலையை வழங்கினார்.

---

# வரி செலுத்துவோர் கவனிக்க

## 1983ல் இயற்றப்பட்ட நிதிச்சட்டத்தின் மூலம் வருமானவரி சட்டத்தில் சில முக்கியமான மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன

1. 'ஸ்டாண்டர்ட்' வரிக் கழிப்பு:-

இப்போது-சம்பளத்தின் உயர்ந்த பட்சம் 25% அல்லது ரூ 5,000-இவற்றில் எது குறைவானதோ, அத்தொகை கழிப்பு நியமமாக கொள்ளப்பட்டிருக்கிறது. 1983, நிதிச்சட்டம் இதை வரி செலுத்தும் சம்பளம் வாங்குவோர்க்கு அனுகூலமாக தளர்த்தியிருக்கிறது. இனி, இக்கழிப்பு சம்பளத்தின் 25% அல்லது ரூ. 6,000-இவற்றில் எது குறைவானதோ அத்தொகை 'ஸ்டாண்டர்ட்'கழிப்பாக கொள்ளப்படும். இம்மாறுதல், 1-4-1984லிருந்து அதாவது மதிப்பீடாண்டு 1984-85லிருந்து அமலுக்கு வரும்.

2. 'கிராச்சுயுடி' மேலான வரித்தள்ளுபடியில் அதிகரிப்பு:-

இப்போது, அரசு ஊழியரல்லாதவருக்கு, வருமானவரித் தள்ளுபடி பெறும் உயர்ந்தபட்ச கிராச்சுயுடி தொகை ரூ. 30,000 மாகும். 1983 நிதிச்சட்டப்படி இத்தொகை ரூ. 36,000 மாக உயர்ந்துள்ளது. மற்ற நிபந்தனைகள் அப்படியே உள்ளன. இத்திருத்தம், பின் தேதியான 1-4-1982லிருந்து அமலுக்கு வருமாயினும், 31-1-1982க்கு முன்னதாக வழங்கப்பட்டுவிட வேண்டிய கிராச்சுயுடிதொகைகளுக்கு இம்மாற்றம் பொருந்தாது.

3. 80 சி பிரிவின்படிஆயுள் இன்ஸ்யூரன்ஸ் பிரீமியம, ஜெனரல் பிராவிடண்ட் ஃபண்ட் முதலியனவற்றின் வாயிலான உயர்ந்தபட்ச கழிப்பு தொகையில் திருத்தம்:

இப்போது, 80 சி பிரிவின்படி, வரி செலுத்துபவரொருவருக்கு, அவரது மொத்த வருவாயில் 30% அல்லது ரூ. 40,000)தொழில் வருவாயில் 40%எழுத்தாசிரியர், கலைஞர், இசைக்கலைஞர் விளையாட்டுவீரர் ஆகியோருக்கு ரூ 60,000)இவற்றில் எது குறைவானதோ அத்தொகை மேற் சொன்ன முறையிலான கழிப்புக்கு அனுமதிக்கப்படுகிறது. 1983 நிதிச்சட்டம் வருவாய் மீதான சதவீத முறையை அகற்றிவிட்டது, 1-4-1984 லிருந்து துவங்கும் மதிப்பீட்டாண்டிலிருந்து. இவ்வகை கழிப்புத் தொகையின் உச்சவரம்பு ரூ. 40,000 மட்டுமாகவே இருக்கும். (முற்குறிப்பிட்டபடி, எழுத்தாளர் முதலியோருக்கு ரூ. 60,000)

இதைத்தவிர, 1-4-1984லிருந்து துவங்கும் மதிப்பீட்டாண்டிலிருந்து, பிரிவினையாகாத ஹிந்து குடும்பங்களில், ஏதேனும் ஒருவரின் பெயரில் பப்ளிக் பிராவிடண்ட் ஃபண்ட், 10 மற்றும் 15 வருட குமுலேடிவ் டைம் டெபாசிட்டில் செலுத்தப்படும் பணத்திற்கு, 80 சி பிரிவின்படி, இம்முறையிலான கழிவு பெறலாம்.

4. 80-எ.ல் பிரிவின்படி வட்டி,டிவிடெண்ட் போன்றவற்றுக்குரிய கழிவில்அதிகரிப்பு

இப்போது, இப்பிரிவின்படி, ரூபாய் ரூ. 4,000 மாக இருக்கும் உயர்ந்தபட்ச தள்ளுபடியில், குறைந்தபட்சம் ஓராண்டுக் காலமுள்ள குறிப்பிட்ட சில திட்டங்களில் செய்யப்படும் முதலீட்டுக்கு மேலும் ரூபாய் 2,000 அதிகரிக்கப்பட்டுள்ளது. 1983 நிதி சட்டம் ரூ. 2,000தனிப்பட்ட தள்ளுபடியை நீக்கிவிட்டு பொதுவான உயர்ந்த பட்ச தொகை ரூ. 4000த்தை ரூ. 7000/ஆக உயர்த்தியிருக்கிறது. 1-4-1984ல் துவங்கும் மதிப்பீட்டாண்டிலிருந்து இந்தத் திருத்தம் அமலுக்கு வரும். ஆயினும், யூனிட்டிரஸ்ட் டிவிடண்ட்கள் மீதான ரூ. 3000/ கூடுதல் தள்ளுபடி, தொடர்ந்திருக்கும்.

### சலுகைகளைப் பெற தவறாதீர்கள்

டைரெக்டர் ஆஃப் இன்ஸ்பெக்ஷன்
(ரிசர்ச், ஸ்டாடிஸ்டிக்ஸ் & பப்ளிக் ரிலேஷன்)
**இன்கம்டாக்ஸ் டிபார்ட்மெண்ட்**
நியூடெல்லி - 110 001.

டி ஏவிபி 83-392

---

# சேலம் மாவட்ட கழக செயல்வீரர்கள் கூட்டம்

வருகிற 2-3-84 தேதி வெள்ளிக்கிழமை மாவட்ட செயல் வீரர்கள் கூட்டம் விஜயராகவ ஆச்சாரியார் ஹாலில் காலை 10 மணிக்கு ஊரகத் தொழில் அமைச்சர்

**மாண்புமிகு அருணாசலம்**

அவர்கள் தலைமையில் நடைபெறவுள்ளது.

அது சமயம் ஒன்றிய நகரக்கழக செயலாளர்களும் பொதுக்குழு உறுப்பினர்களும் மாவட்ட பிரதிநிதிகளும் சட்டமன்ற உறுப்பினர்களும் எம் ஜி ஆர். மன்ற நிர்வாகிகளும் தொழிற்சங்க நிர்வாகிகளும் மகளிர் பிரிவு விவசாயப்பிரிவு ஆகியவற்றின் நிர்வாகிகளும் அவசியம் கலந்துகொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இக்கூட்டத்தில் மாவட்ட செயலாளர்
**திரு. கண்ணன்**
அவர்கள் கலந்து கொள்வார்

இவண்
கே. பி. செல்வராசு

# தமிழினத்தின் புகழை தரைமட்டமாக்கிய கருணாநிதி

சிலிர்த்து நிற்கும் குன்றுகளை மகுடங்களாய் சூடியுள்ள சேலம் மாவட்டத்திற்கு சிறப்புக்கள் பலவுண்டு!

ஐவகை நிலம் கொண்ட அழகான தமிழகத்தில் "நெய்தலை" நீக்கினாலும்– தறி நெய்தலை நீக்காச் சேலம்!...

மரத்தில் குலுங்கும் மாங்கனிகளுக்கு மட்டுமல்ல; மண்ணில் பூக்கும் உலோகக் கனிகளுக்கும் தமிழ் நிலத்தில் தாயகம் அது!

நறுமணத்தால் நாசிக்குப் பெருமை சேர்க்கும் அறுசுவை உண்டிக்கும், அன்பு வெள்ள விருந்தோம்பலுக்கும் தனிப் புகழ் பூமியது!

சிறப்புமிக்க சேலத்தில் சிதைந்த கோட்டையாம் கருணாநிதி கட்சியின் சிதலப்பட்ட மாநாடு நடந்துள்ளது.

மாநாட்டுக்கு முன்னதாய், மஸ்தானும் நடராசனும் இறந்தது மாபெரும் சோகம் என்கிறார் கருணாநிதி.

"மாறன் அந்த மாநாட்டிற்குத் தலைமை தாங்குவது அதை விடப் பெரிய சோகமாயிற்றே!..." என்கிறார்கள், அங்கே காயப் பட்டுக்கிடக்கும் பலர்!

இடைவெளிகளின் பரப்பு அதிகமானாலும் இதயமுள்ள மனிதர்கள் என்ற முறையில் இறந்தவர்களுக்கு நம் ஈரமான இரங்கல்கள்!

உறவுகளில் பிரிந்திருந்தாலும், பிரிவுகளில் நினைத்துக் கொள்வது தானே மனித குணம்— மனிதத்தன்மை?

அதனால் தான்புரட்சித் தலைவர் மறைந்ததஞ்சை நடராசன் அவர்களைப் பற்றிச் சட்ட மன்றத்தில் இரங்கல் உரையாற்றுகையில், அவர் மனத்தால் மென்மையானவர்; கொள்கையால் உறுதியானவர், என்று குறிப்பிட்டு ஆழ்ந்த அனுதாபம் தெரிவித்திருந்தார்.

"இடிமேல் இடிவிழுந்து விட்டதே!" என்கிற கருணாநிதி அடுத்த நாளே அன்ன வாகனத்திலும், குதிரை ரதத்திலும் அமர்ந்து கோலாகலமாய்ப் பவனி வருகிறார்! ஆம்! அவரால் மட்டுமே அப்படி முடியும்!

## விளம்பர வெறி

இவர் சொல்லுவது போலவே, இடிமேல் இடி விழுந்து, இரண்டு பெரிய மாவட்டங்களில் நின்ற தூண்கள் சாய்ந்துவிட்டன, என்று இவரின் இதயம் உள்ளபடியே, கண்ணீர்க் காயப்பட்டிருக்குமானால், உடனே கூடுகிற இந்தச் சேலம் மாவட்ட மாநாட்டைக் கொஞ்சம் ஒத்தி வைத்திருக்கக் கூடாதா?... முடியாதா?...

நடராசன்-மஸ்தான் போல் அடிநாளிலிருந்து தமிழ் இனத்திற்கே தலைவராயிற்றே!

தமிழினத்திற்கே தலைவராம் கருணாநிதியை சோவியத்அதிபரான ஆந்திரபோவ் அறியாமலிருக்க முடியுமா, என்ன?

யாசர் அராபத் உள்பட உலகிலுள்ளஎல்லாபுரட்சி வீரர்களும் - இனத் தலைவர்களும் - விடுதலை விடிவெள்ளிகளும் இந்தக் கோபாலபுரத்து சூரியனைத்தானே தினம்கண்டு கேட்டு. கருத்தறிந்து செயல்பட்டு வருகிறார்கள்!

## இரங்கல் கவிதை

இரங்கல் கவிதைபற்றிச் சொல்ல வந்த நான் எங்கேயோ போய் விட்டேனே!

அண்ணாவுக்கும், ஆந்திரபோவுக்கும் இரங்கல் வடித்த அவர் இப்போது தன் அருமை நண்பர் நடராசனுக்கும் ஒரு கவிதையை எழுதி முரசொலியில் போட்டுவிட்டு இறுதியாத்திரைக்கும் போகாமல், சேலத்திற்குப் பயணப்பட்டு விட்டார், இந்தச் "சோழன்'!

தளபதிகளின் மரணத்திற்கெல்லாம் தமிழினத் தலைவரால் செல்ல முடியுமா, என்ன?... ஆந்திரபோவின் மரணத்திற்கே செல்ல அவருக்கு அவகாசம் - வாய்க்கவில்லை.

தமிழினத் தலைவர் என்றுதம்பட்டம்அடித்தே தமிழினத்தின் தனிப்புகழ் பெருமையை தரைமட்டமாக்கி விட்டார்!

உலக அரங்கில் தமிழினத்தின்சீரையும் சிறப்பையும் ஊனப்படுத்த இது ஒன்று போதாதா?

மன அதிர்ச்சியால் மாநாட்டைத்தள்ளிவைக்கலாம் என்று கருணாநிதி நினைத்தாலும் முரசொலி மாறன் ஒத்துக்கொள்வாரா? அந்த அளவிற்கு அவருக்கு மன முதிர்ச்சி உண்டா?..

மாறன்மனம்கோணுதல் மாமனாரின் நெஞ்சுக்கு நீதியாகுமா?.

அவரை மீறி இவரால் அணுவும் அங்கே அசைய முடியுமா?

## எத்தனை போர் முகப்புகள்

மாறனின் சக்தியை அறிய 'மனோகரன்' களிடம் கேட்டாலல்லவா தெரியும்!

வியர்வையும் குருதியும் வேர் சொரித்து கட்சிச் செடியைக் கட்டி வளர்த்தவரல்லவா மாறன்? பாவம் பகட்டு என்றால் என்ன என்று அவருக்குத் தெரியுமா?

பகலும் இரவும் கட்சிப் பற்றியும் தொண்டர்கள் குறித்தும் கவலைப் படும் கருணைக்கடலல்லவா அவர்? தொண்டர் திலகமல்லவா அவர்?

மக்களை நாளும் சந்தித்து மடை திறந்த வெள்ளமாய்ப் பேசி, அவர் தம் உள்ளம் கவர்ந்தஉரை வேந்தரல்லவா, மாறன்?

அவர் கண்ட களங்கள் எத்தனை? கடும் பயணம் எத்தனை?

போராட்டம் எத்தனை? போர் முகப்பு எத்தனை?

இப்படி மாறனைப் பற்றி, யாராவது ஒரு கட்சிக்காரனோ - அல்லது பொது மக்களில் யாராவது -எங்காவது பேசிக்கேட்டதுண்டா? சொல்லக் கேட்டதுண்டா?

இதற்கு முற்றிலும் மாறாகவே அவரைப்பற்றி அனைவரும்அறிவார்கள்! ரகசியமாய் சொல்லுவார்கள் கட்சிக்காரர்களோ சொல்ல முடியாமல் கிசுகிசுப்பார்கள்!

## கவிஞர் முத்துராமலிங்கம்

கட்சிக்காய் உழைத்தவர்களின் இறுதி ஊர்வலத்தில் கூடக்கலந்துகொள்ள முடியாத கருணாநிதிக்கு, உற்சவமூர்த்தியாய் மாநாட்டு ஊர்வலத்தில் மட்டும் கலந்து கொள்ளமுடிகிறது

விளம்பர வெறித்தனம் ரத்தத்தில் ஊறிப்போன துர்த் தேவதைகளால் மூலவராய் மட்டும் மூலையில் வீற்றிருக்கவா முடியும்? அடிக்கடி உற்சவர்களாய் உலா வராவிடில் அவர்கள் தலையே வெடித்துப்போகுமே?

கருணாநிதி இருக்கிறாரே, அவர் அண்ணாவுக்கும் இரங்கல் கவிதை எழுதுவார்! ஆந்திரபோவுக்கும் இரங்கல் கவிதை எழுதுவார்! ஏனென்றால் ஆந்திரபோவ் இவருக்குஅண்டை வீட்டுக்காரரா? — பால்ய சிநேகிதரா?-குறைந்தபட்சம் இவருக்கு அறிமுகமானவராகவாவது இருக்க மாட்டாரா, என்ன?..

காரணம் கருணாநிதி

---

ஆசிய விளையாட்டு போட்டி

## ரூ. 67கோடி செலவு: பார்லிமெண்டில் தகவல்

புதுடெல்லி, பிப். 28- ஆசிய விளையாட்டுப் போட்டிக்காக அரசுவிளையாட்டுத்துறை ரூ.62 43 கோடி செலவிட்டது. மொத்தத்தில் அரசு செலவு சுமார் ரூ 67 கோடி ஆகும் என்று விளையாட்டுத் துறை துணை அமைச்சர் ஆசோக்கெலோட் எழுத்து மூலமான கேள்வி ஒன்றுக்கு பதிலளிக்கையில் இன்று நாடாளுமன்றத்தில் தெரிவித்தார். இந்த செலவில் புதிய ஸ்டேடியம் கட்ட செலவழிக்கப்பட்ட ரூ. 39.88 கோடியும் மற்றும் புதுப்பித்தலுக்கான பணிகளுக்கு செலவழிக்கப் பட்ட ரூ. 4.42 கோடியும் அடங்கும் என்றும்அமைச்சர் தெரிவித்தார்.

## லாரி விபத்து: 4 பேர் சாவு

சேலம், பிப். 28— நாமக்கல்லை அடுத்த மாவடிப்பட்டியில் கரும்பு ஏற்றிய லாரி கவிழ்ந்தது. லாரியில் இருந்தவர்களில் 4 பேர் இறந்தனர். மற்றும் 14 பேர் படுகாயம் அடைந்தனர்.

படுகாயமுற்றவர்கள் 14 பேரும் நாமக்கல் மருத்துவமனையில் சேர்க்கப் பட்டனர்.

## தொழிலாளர் தேசிய பாதுகாப்பு தின விழா

சென்னை, பிப். 28— தொழிலாளர் தேசியபாதுகாப்பு தினவிழா மார்ச் 4-ந் தேதி ஒவ்வொரு ஆண்டும் கொண்டாடப்படுகிறது. தொழிற்கருவிகளிடையே தொழிலாளர் பாதுகாப்பு பற்றியும், சுற்றுப்புற சுகாதாரம் பற்றியும் மார்ச் 4-ந் தேதி தொழிற்சாலைகளுக்குள்ளேயே கருத்தரங்கம் கலைவிழாக்களை நடத்தி இந்தஇயக்கத்தை பரப்புமாறு தொழிலாளர் நல இலாகா கேட்டுக் கொண்டுள்ளது.

---

ரோடியர் மில்லை திறக்கக் கோரி

# பாண்டிச்சேரியில் கழகம் நடத்திய பிரம்மாண்ட பேரணி

**புதுவை. பிப். 28- ரோடியர் மில்லை உடனடியாகத் திறப்பது உள்ளிட்ட பல்வேறு கோரிக்கைகளை நிறைவேற்றக் கோரி புதுவை மாநில சழகம் சார்பில் 50 ஆயிரத்திற் தம் மேற்பட்டோர் பங்கேற்ற வரலாறு காணா பேரணி மாநில கழக செயலாளர் பி. கே. லோகநாதன் தலைமையில் நடந்தது**

புதுவை மாநிலக்கழகம் சார்பில் நேற்று மாலை வரலாறு காணா பிரமாண்டமான பேரணி நடந்தது. கழகப் பேரணி நேற்று மாலை ரோடியர் மில் திடலிலிருந்து மாலை 4.30 மணி அளவில் புறப்பட்டது.

பேரணிக்கு புதுவை மாநிலக் கழகச் செயலாளர் பி. கே. லோகநாதன் தலைமை வகித்தார். முன்னாள் எம் பி. முனுசாமி, மாநில கழக நிர்வாகிகள் சின்னதுரை ராதா கிருஷ்ணன், உமாபதி, அமீர் சுல்தான், எம். பி. நந்தன் மற்றும் முன்னாள் அமைச்சர் வி. எம். சி வரதப் பிள்ளை. முன்னாள் சட்ட மன்ற உறுப்பினர்கள் ராமலிங்கம், வேணுகோபால், பழனிநாதன், எம். பாண்டுரங்கன், மணிமாறன், வரதன், பொதுக் குழு உறுப்பினர்கள் ராஜசெல்வம், மணிவண்ணன் ஆர். எஸ். ராமசாமி, சுல்தான், தொழிற்சங்க நிர்வாகிகள் சுப்பராயன், பெருமாள், வேலவதாசன் ராம்குமார், ரங்கராஜ். விஜயபாரதி, மகளிர் அணியைச் சேர்ந்த அன்னபூரணி. கழக வக்கீல்கள் குகானந்தம், ராமச்சந்திரபாபு, முனுசாமி, பரசுராமன், ட்சரன், பக்தவத்சலம் உள்ளிட்ட திரளான கழக மன்ற, மகளிர், தொழிற் சங்க அணியினர் கலந்து கொண்டனர்

### கவர்னரிடம் மனு

பேரணி பேருந்து நிலையம் அருகில் வந்ததும் அங்கிருந்த அண்ணாசிலைக்கு மாநில கழக செயலாளர் பி.கே. லோகநாதன் மாலை அணிவித்தார். லால்பகதூர்சாஸ்திரி வீதி, மகாத்மா காந்தி வீதி, வல்லபாய்பட்டேல்வீதி அண்ணாசாலை நேரு வீதி, மாதா கோவில் வீதி, ஆஸ்பிடல் ரோடு, ஆர். டி. ஓ. ஆபீஸ் வழியாக பேரணி லெப்டினன்ட் கவர்னர் மாளிகையை அடைந்தது. அங்கு பி. கே. லோகநாதனும் மற்ற கழக முன்னணியினரும் கோரிக்கை மனுவை லெப்டினென்ட் கவர்னர் கோனே பிரபாகரராவிடம் அளித்தனர்.

கழகம் நேற்று நடத்திய பேரணி புதிய வரலாறு படைக்கும் வண்ணம் அமைந்திருந்தது. புதுவையில் இதுவரை இப்படியொரு பேரணி நடந்ததில்லை என்று கூறும் வகையில் பல்லாயிரக் கணக்கான மக்கள்பேரணியில்கலந்து கொண்டனர்.

### பிரமாண்ட அணிவகுப்பு

50 ஆயிரத்திற்கும் மேற்பட்டோர் பங்கேற்றஇந்த பேரணியில் 150க்கும்மேற்பட்ட மோட்டார் சைக்கிள்கள், 3 ஆயிரத்துக்கும் மேற்பட்ட, சைக்கிள்கள், 500க்கும் மேற்பட்ட ரிக்ஷாக்கள், 30க்கும் மேற்பட்ட டிராக்டர்கள், ஏராளமான கார்கள் ஆகியவையும் அணி வகுத்து வந்தன.

லெப்டினென்ட் கவர்னரிடம் கொடுக்கப்பட்ட கோரிக்கை மனுவில்ரோடியர் மில்லை உடனடியாக திறக்கக் கோரியும். திமுக ஆட்சிக்காலத்தில் வேலை நீக்கம் செய்யப்பட்ட 10 பேர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக் கொள்வது, சட்டசபை, நகர சபை, பஞ்சாயத்துத் தேர்தலை விரைவில் நடத்துவது, வீட்டுவரி போன்றவற்றைகுறைப்பது புதுவை மாநில அரசியல் தியாகிகளுக்கு தமிழகத்தைப் போல் புதுவையிலும் உதவிகள் வழங்குவது, விவசாய கடன்கள் ஜப்தி நடவடிக்கையை நிறுத்துவது, கடன் வட்டி தள்ளுபடி செய்வது, கைத்தறி நெசவாளர்களுக்கு தமிழகத்தைப் போல் கூலி உயர்வு வழங்குவது, நெசவாளர்களுக்கு பாதுகாப்பு சட்டம் கொண்டு வருவது, கேளிக்கை வரி உயர்வை ரத்து செய்வது போன்ற கோரிக்கைகளை நிறைவேற்றக் கோரியிருந்தனர்.

பின்னர் நிருபர்களிடம் பேசிய பி. கே. லோகநாதன் இந்த மனுவின் நகல் ஜனாதிபதி, பிரதமர் மற்றும் தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் ஆகியோருக்கும் அனுப்பி வைக்கப்படும் என்று தெரிவித்தார்.

## மின்சார ரயில் ஏறி வாலிபர் மரணம்

சென்னை, பிப். 28- மின்சார ரயில் ஏறி ஒரு வாலிபர் மரணம் அடைந்தார்.

ஜெயசிலன் வயது 17. வியாசர்பாடியைசேர்ந்தவர் இவர் ரயில் பாதை ஓரமாக நடந்துசென்ற போது ரயில் தண்டவாள ஸ்லிப்பர் கட்டை தடுக்கி தண்டவாளத்தில் விழுந்தார்.

அப்போது அந்தப் பாதையில் வந்த மின்சார ரயில் அவர் மீது ஏறி அந்த இடத்திலேயே மரணம் அடைந்தார்.



---

செங்கை மாவட்ட

## கூட்டுறவு அச்சக தொழிலாளர் சத்துணவுக்கு ரூ. 5 ஆயிரம் நன்கொடை

செங்கல்பட்டு, பிப். 28- செங்கல்பட்டு மாவட்ட கூட்டுறவு அச்சக பொது நிதியிலிருந்து முதலமைச்சரின் குழந்தைகள் சத்துணவு திட்டத்துக்கு ரூ. 5000 நன்கொடை வழங்கப் பட்டுள்ளது. இதற்கான காசோலையை கடந்த 25-ந்தேதி யன்று அச்சகத் தனி அலுவலர் கொ. சி. எல்லப்பன் முதல்வர் புரட்சித் தலைவரிடம்வழங்கினார்.

-6ம் பத்தி தொடர்ச்சி

இணைந்தனர்.

கழகத்தில் இணைந்த இவர்கள் அனைவரும் 20 ஆண்டுகளுக்கும்மேலாக அந்தந்த கட்சிகளில் தீவிர உறுப்பினர்களாக இருந்து பணியாற்றியவர்கள்.

நிதியமைச்சர் நாவலர், அமைச்சர் எஸ். டி. எஸ். முன்னிலையில் இவர்கள் அனைவரும் தங்களை கழகத்தில் இணைத்துக் கொண்டனர்

அண்ணா தொழிற்சங்க பேரவை பொதுச்செயலாளர் வை. பெருமாள், புதுக்கோட்டை நகரகழக செயலாளர்டி. ஜெயராஜ், புதுக்கோட்டை நகர 31வது வட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் ராலன், மேலூர்மு. க. உதயகுமார் ஆகியோர் அப்பபோது உடனிருந்தனர்.

தமிழக அரசைப் போல்

மத்திய அரசும் தனது

# நிறுவனங்களுக்கு கைத்தறித் துணிகளை வாங்கவேண்டும்

அனகாபுத்தூர் ராமலிங்கம் கோரிக்கை

**சென்னை பிப் 28- தமிழக அரசைப் போல் மத்திய அரசும் தனது மேற்பார்வையிலுள்ள நிறுவனங்களுக்கு கைத்தறித் துணி வாங்க உத்தரவிட வேண்டுமென்று கோ-ஆப் டெக்ஸ் ஆலோசனைக் குழுத்தலைவர் அனகாபுத்தூர் ராமலிங்கம் கோரிக்கை விடுத்துள்ளார்.**

மத்திய வர்த்தகத் தொழில் துறை, வர்த்தக துணை அமைச்சர் பி.ஏ. சங்மாவிடம் தமிழ்நாடு கோஆப்டெக்ஸ் ஆலோசனைக் குழுத் தலைவர் அனகாபுத்தூர் ராமலிங்கம் கோரிக்கை மனு ஒன்றைக் கொடுத்தார். அந்த மனுவில் அவர் கூறியிருப்பதாவது:-

தமிழ் நாட்டிலுள்ள கைத்தறி நெசவாளர்களின் வேண்டுகோளை ஏற்று முதல்வர் புரட்சித் தலைவர் அரசு கோ-ஆப்டெக்ஸ் நிறுவனம் மூலமாக அரசு ஊழியர்களுக்கு கடன் வழங்கி தவணைமுறையில் பிடித்தம் செய்து அந்தந்த இலாக்காக்களே பொறுப்பேற்று மாநில சங்கத்திற்கு பணம் அனுப்பி வைக்கும் முறையினைஏற்படுத்தி இருக்கிறது.

தமிழ்நாடு அரசு நிறுவனங்களான மருத்துவமனைகள், போக்குவரத்து கழக ஊழியர்கள் போன்றோருக்கு சீருடைகளுக்கு கைத்தறி துணிகளைத்தான் வாங்க வேண்டுமென்ற உத்தரவினை பிறப்பித்து அதன் மூலம் கைத்தறி நெசவாளர்களை வாழவைத்து வருகிறார்கள். இதனை மற்ற மாநிலங்களிலும் நடைமுறைப்படுத்த மத்திய அரசு முன்வரவேண்டும்.

### தொழில் பாதுகாப்பு சட்டம்

கைத்தறி நெசவாளர்களுக்கு தொழில் பாதுகாப்புச்சட்டம், குறைந்த பட்ச கூலி நிர்ணயசட்டம் ஆகியவற்றை தமிழக அரசு கொண்டுவந்துள்ளது. இதுபோல் மற்ற மாநிலங்களிலும் கொண்டு வந்து கைத்தறி நெசவாளர் துயர் துடைக்க மத்திய அரசு உதவிசெய்ய வேண்டும்.

மேலும் தமிழகத்திலுள்ள 5½ லட்சம் தறிகளில் 3½ லட்சம் தறிகள் கூட்டுறவின் கீழ் கொண்டு வந்துள்ளது. கைத்தறி நெசவாளர்களின் துயர் துடைக்கும் வகையிலும், கைத்தறியை பேணிகாக்கும் வகையிலும் நடவடிக்கை எடுக்க மத்திய அரசு முன் வர வேண்டும்.

மத்திய அரசின் மேற்பார்வையிலுள்ள தந்தி, தபால், இரயில்வே, சுகாதாரத்துறை, ராணுவம் போன்ற எல்லாத் துறைகளிலும் கைத்தறி துணிகளை கண்டிப்பாக வாங்க வேண்டுமென்றஉத்தரவை மத்தியஅரசு பிறப்பித்து அமல்படுத்த வேண்டும்.

கைத்தறிக்கென்று சில ரகத்துணிகளை ஒதுக்கி சட்டம் கொண்டு வரும் பரிசிலனையை மத்திய அரசு விரைந்து செயல் படுத்த வேண்டும்.

விசைத்தறிகளுக்கும்சில கட்டுப்பாட்டை விதிக்கலாம் கைத்தறித்துறை பற்றி வெளிநாடுகளுக்கு ஆய்வுக் குழுக்களில் செல்லும் அதிகாரிகளை கைத்தறி துறையிலேயே நியமித்து அவர்கள் அனுபவங்களை பயன் படுத்த வேண்டும்.

இவ்வாறு அனகாபுத்தூர் ராமலிங்கம் கூறியுள்ளார்.



தி. மு. க. - காங்கிரஸ் உள் பட

பல்வேறு கட்சிகளிலிருந்து விலகி

# நாவலர் - எஸ்.டி.எஸ். முன்பு கழகத்தில் இணைந்த168பேர்கள்

**சென்னை, பிப். 28. புதுக்கோட்டை நகரத்தைச் சேர்ந்த திமுக, உள்ளிட்ட பல்வேறு கட்சிகளை சேர்ந்த 168 பேர்கள், நிதியமைச்சர் டாக்டர் நாவலர், அமைச்சர் எஸ் டி எஸ். முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.**

இவர்கள் அனைவரும் நேற்று மாலை தலைமைக் கழகத்தில் தங்களை கழகத்தில் இணைத்துக் கொண்டனர்.

புதுக்கோட்டை நகர திமுக.வைச் சேர்ந்த 96 பேரும் சிவாஜி ரசிகர் மன்றத் தோழர்கள் உள்பட இந்திரா காங்கிரசை சேர்ந்த 65 பேரும்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த 4 பேரும், கா. கா. தே. கா. கட்சியைச் சேர்ந்த இரண்டு பேரும், ஜனதாவைச் சேர்ந்த ஒருவரும் ஆக மொத்தம் 168 பேர் அந்தக் கட்சிகளிலிருந்து விலகி கழகத்தில் இணைந்தனர்.

புதுக்கோட்டை நகர 21-வது வட்ட தி. மு. க. பிரதிநிதி யோகேந்திரன், திமுக, பிரமுகர்கள் முக்காணா மலைப்பு அப்துல் மஜீத, எஸ். முத்து, பி. எம். அப்துல்லா, கே. மாணிக்கம் பிள்ளை.

புதுக்கோட்டை நகர 21வது வட்ட இந்திரா காங்கிரஸ் செயலாளர் சி. நாகராசன் 21வது வட்ட இளைஞர் காங்கிரஸ் செயலாளர் கே தேவராஜன், காங்கிரஸ் பிரமுகர்கள் சி. சாத்தையா, ஏ வி. கோவிந்தன் செட்டியார், டி. அப்பாவு ஆச்சாரி ஆகியோர் கழகத்தில் இணைந்தவர்களில் குறிப்பிடத் தக்கவர்களாவர்

### திரளான தாய்மார்கள்

முஸ்லிம் தாய்மார்கள் உள்பட திரளான தாய்மார்களும் நேற்று தங்களைக் கழகத்தில் இணைத்துக் கொண்டனர்.

புதுக்கோட்டை நகர தி. மு. க மகளிர் பிரிவைச் சேர்ந்த எம். கமலம், இந்திராணி, எம். சரோஜா, ஏ. சைனம்பூ, பீபி ஜான், சைத்தூன் பீபி, பதருன்னிசாபேகம், மைமூன் பேகம், அப்ரூஸ் பேகம், ஆயிஷா பீபி, காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த புஷ்பம், சிங்கம்மாள், வே. தனலட்சுமி ஆகியோரும் கழகத்தில்

(1-ம் பத்தி பார்க்க)



PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor E. PARASURAMAN

வறட்சி நிவாரணம் மற்றும்

# வெள்ள நிவாரணப் பணி: போர்க்கால வேகத்தில் செய்த கழக அரசு

## சட்டசபையில் கழக உறுப்பினர் அண்ணாதாசன் பேச்சு

**சென்னை, பிப். 28. வறட்சி மற்றும் வெள்ள நிவாரணப் பணிகளை போர்க்கால அடிப்படையில் புரட்சித்தலைவர் அரசு மேற்கொண்டது என சட்டசபையில் கழக உறுப்பினர் அண்ணாதாசன் கூறினார்.**

சட்டசபையில் வறட்சி-மற்றும், வெள்ள பாதிப்பு குறித்த அறிக்கை மீது நடந்தவிவாதத்தில்கலந்து கொண்டு பேசிய கழக உறுப்பினர் அண்ணாதாசன் கூறியதாவது:-

தொடர்ந்து இரண்டு மூன்று ஆண்டுகள் வறட்சியாகி விட்ட காரணத்தால்குளத்திலே தண்ணீர் இல்லை, ஏரியிலே தண்ணீர் இல்லை, ஆக குடிப்பதற்கேதண்ணீர் இல்லை என்ற குறையை எடுத்து வைத்ததன் காரணத்தாலே முதல்வர் புரட்சித் தலைவர் உடனடியாக வறட்சி நிவாரணப் பணியை அங்கே போர்க்கால அடிப்படையில் செய்ய வேண்டுமென்று உத்தரவு தந்தார் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

அந்த அடிப்படையிலே நாட்டிலே ஒவ்வொரு கிராமத்திலேயும் ஆழ்குழாய் கிணறுகளை ஆங்காங்கே உடனடியாக அமைத்து ஒரு வாரத்திற்குள் அல்லது 15 தினங்களுக்குள்ளாக அல்லது அதிகமாகப் போனால் 1 மாதத்திற்குள்ளாக அமைத்து, பாதுகாக்கப்பட்ட குடிநீர் வசதியை அளித்து, தமிழ்நாட்டிலேயே குடிநீர்திட்டங்கள் நிறைவேற்றித் தந்த ஒரு ஒப்பற்ற அரசுதான் இன்றைய புரட்சித் தலைவர் அரசு என்பதை நான் சொல்ல விரும்புகிறேன்.

அன்றைக்கு ஒருகுடத்தைத் தூக்கிக்கொண்டு பல கிலோ மீட்டர் தூரம் சென்ற தாய்மார்கள் ஆழ்குழாய் கிணறு மூலம் தண்ணீர் பெற்று அதற்காகப் பாராட்டு தெரிவித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை நான் இன்றைக்குப் பெருமையோடுசொல்லிக் கொள்கிறேன்.

குறிப்பாக பொன்மலை நகராட்சியில் கடந்த காலத்தில் ஒரிடத்திலாவது ஆழ்குழாய்க் கிணறு அமைக்கப்பட்டு அந்தப் பகுதி மக்களுக்கு குடிநீர் வசதி செய்து கொடுக்கப்பட்டதா என்பதைஅமைச்சராகஇருந்த அன்பில் சொல்லட்டும். அந்தத் தொகுதியைப் பற்றி அவருக்கு நன்றாகவே தெரியும்.

புரட்சித்தலைவர் அரசு தான் வறட்சிப் பகுதிகளான பொன்மலை, அலிகான்குளம் பகுதிகளில் 20 ஹார்ஸ்பவர் மோட்டாரை வைத்து ஆழ்குழாய் கிணறுகளிலிருந்து தண்ணீரை எடுத்துஇரண்டரைபர்லாங்குக்கு மேலே இன்னும் சொல்ல வேண்டுமானால் 2கிலோமீட்டருக்கு மேலே குழாய்களைப் போட்டு உயர்ந்தமேல்நிலை நீர்த் தேக்கத் தொட்டி மூலம் தண்ணீர் வழங்கி வருகிறது.

### குடிநீர் வசதி

குறிப்பாக சொல்ல வேண்டுமானால் சுந்தரராஜ்நகர், சுப்பிரமணியபுரம் அங்கே இருக்கிற போலீஸ் ரிசர்வ் காலனி போன்ற பகுதிகளுக்கு தண்ணீர் விநியோகிக்கப்பட்ட செயல்கள் வறட்சி நிவாரணப் பணியிலே செய்து முடிக்கப்பட்டது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

அதே போல பொன்மலை நகராட்சியில் கொட்டப்பட்டி என்ற பகுதியில் 20ஹார்ஸ் பவர் மோட்டாரைப் பொருத்தி அங்கே இருந்து பொன்மலைக்கு எடுத்து சென்று மலைமேல் உள்ள நீர்த் தேக்கத் தொட்டியிலே ஏற்றி, அந்தப் பகுதியிலே தெருத்தெருவாகத் தண்ணீர் சப்ளை கொடுத்திருக்கிறார்கள் அதுவும் இந்த ஆட்சி நிவாரணப் பணியிலே செய்து முடித்த வேலையாகும். சிற்றூராக இருந்தாலும்சரி, பேரூராக இருந்தாலும் சரி, 100க்கு மேற்பட்ட குழாய்களை அமைத்து, அந்த மக்களுக்கு இந்தத் துயர் நீக்கப்பட்டிருக்கிறது.

### நிவாரணப் பணிகள்

இதுபோன்றுதிருவரம்பூர் தொகுதியில் மட்டும் 120 ஆழ்குழாய் கிணறுகள் அமைக்கப்பட்டது என்றால் திருச்சிமாநகரத்தில் ஒவ்வொரு பகுதியிலும் தெருதெருவாக பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் விநியோகத்தை இந்த அரசு தான், செவ்வனே செய்து முடித்திருக்கிறது.

அடுத்து இந்த நிலைமையிலிருந்து மாறி தமிழகம் ஒரு நல்லநிலைமைக்கு வருகிறபோது 83ம்ஆண்டு டிசம்பர் மாதம் 21ம்தேதி ஒரு மிகப்பெரிய பாதிப்பு ஏற்பட்டது. பெரும்மழையினால் திருச்சி மாவட்டமும், தஞ்சை மாவட்டமும்பாதிப்பிற்குள்ளாயின.

ஒரு பக்கத்திலே தண்ணீர்இல்லையென்றுகுறை தீர்க்கிற பணியிலே அரசு ஈடுபட்டு, நல்ல முறையிலே திட்டங்களை நிறைவேற்றிய போதுதான் இதுபோன்று மழை பெய்து திருச்சி மாவட்டத்திலும், தஞ்சை மாவட்டத்திலும் பாதிப்பு ஏற்பட்டது என்பதைநாம் எல்லோரும் அறிவோம்.

இந்த பாதிப்பைக் கேள்விப்பட்ட உடனே முதல்வர் புரட்சித்தலைவர் உடனடியாக தஞ்சைக்கு வந்து அந்தப் பக்கத்திலே இருக்கிற மக்களை சந்தித்து, குறைகளைக் கேட்டு, அதிகாரிகளையும் அமைச்சர்களையும் அழைத்து உடனடியாக நிவாரணப் பணிகளை நிறைவேற்ற வேண்டுமென்று கட்டளையிட்டார்.

### போர்க்கால நடவடிக்கை

நாம் சுதந்திரம் பெற்றதற்கு பிறகுஎத்தனையோ வறட்சியையும், வெள்ளத்தையும் சந்தித்து இருக்கிறோம்.

ஆனால் அந்தக்காலத்திலே எவ்வளவு வேலைகள் நடந்திருக்கின்றன என்பதையும் இப்போது இந்த குறுகிய காலத்தில் புரட்சித் தலைவர் அவர்களின் அரசு எவ்வளவு வேலைகளை செவ்வனே செய்து முடித்திருக்கிறது என்பதையும்தயவு செய்து கணக்கிட்டுப் பார்க்க வேண்டும்.

அப்படி பார்ப்பீர்களானால் எது போர்க்கால நடவடிக்கை என்பதை தெளிவாக நீங்கள் புரிந்து கொள்ளமுடியும்என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

பயிர்கள் வெள்ளத்தில் மூழ்கிவிட்டதால் உரிய காலத்தில் அறுவடை செய்ய முடியாமல் அவதியுற்றார்கள். இதன்காரணமாக நெல்லின் நிறம்மாறி வியாபாரிகள் அதைவாங்க மறுக்கிற சூழ்நிலை ஏற்பட்டது.

இந்த நிலையில் அரசே அந்தநெல்லை குவிண்டால் ஒன்றுக்கு 128 ரூபாய் கொடுத்து கொள்முதல் செய்ய வேண்டுமென்ற உத்தரவு அளிக்கப்பட்டு விவசாயிகள் பாதுகாக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதைதெரிவித்து கொள்ள



ஆசைப்படுகிறேன். இவ்வாறு அண்ணாதாசன் பேசினார்.

சழக எம்.எல்.ஏ திருமாறன் உடல்நிலை:

## அமைச்சர் ராகவானந்தம் விசாரித்தார்

சென்னை, பிப். 28— சென்னை ராயப்பேட்டை மருத்துவமனையில் கழக சட்டமன்ற உறுப்பினர் திருமாறன் நெஞ்சுவலி காரணமாக அனுமதிக்கப் பட்டுள்ளார்.

அவரை அமைச்சர் ராகவானந்தம் சென்று பார்த்து உடல் நலம் விசாரித்தார்.

## எண்ணை குழாய் தீ: ஊரே பற்றி எரிந்து 82பேர்சாவு

குபாட்டோவ், பிப், 28 பிரேசில் நாட்டில் சேவோ பாலோநகர் அருகேஉள்ள குடிசைப் பகுதியில், எண்ணை குழாயில் தீ பிடித்தது. இந்த தீ குடிசைப் பகுதிக்கு தாவி அந்த ஊரின் பாதிப் பகுதி எரிந்து சாம்பலானது. இந்த பயங்கர தீ விபத்திற்கு 82 பேர் பலியானார்கள்.

# குடும்பநலத் திட்டம்: அரசு ஊழியர்கள், ஆசிரியர்கள் உறுதி

**சென்னை, பிப் 28- தமிழகத்தில் குடும்ப நலத்திட்டம நல்லமுறையில் வெற்றி பெற பூரண ஒத்துழைப்புத் தருவோம் என்று அரசு ஊழியர்களும ஆசிரியர்களும உறுதி அளித்துள்ளனர்.**

அரசு ஊழியர்கள் மற்றும் ஆசிரியர்கள் அடங்கிய 40 சங்கங்களின் தலைவர்கள் பிரதிநிதிகள் ஆகியோர் கூட்டம் சென்னை தலைமைச்செயலக கூட்டு மண்டபத்தில் நடைபெற்றது.

குடும்பநலத்திட்டத்தின் அவசியம்குறித்து பல்வேறு பிரச்சினைகளை அவர்கள் மனந்திறந்து விவாதித்தனர்.

தமிழக அரசு 2ம் செயலாளர் டி. வி. அந்தோணியும் இந்த கூட்டத்தில் கலந்து கொண்டு உரையாற்றினார்.

### மகத்தான வெற்றி

குடும்பநல திட்டத்தின் அவசியத்தை நன்குஉணர்வதாகவும், அரசு ஊழியர்களும், ஆசிரியர்களும் அந்தத் திட்டத்தின் மகத்தான வெற்றிக்காக எல்லா ஒத்துழைப்பையும் அளிப்பதாகவும்அப்போது உறுதி எடுத்துக்கொண்டனர்.

அனைவரும் ஓய்வு பெறும் சமயம் குடும்பச் சுமைகளை களைந்திட உயர்ந்தபட்ச அளவு ஒரு குடும்பத்தில் 2 குழந்தைகளுக்கு மேற்படாமல் பிறப்பை தவிர்க்க 33 வயதிற்கு மேற்பட்ட ஊழியர்கள் அனைவரும்உறுதி அளிப்பதாகவும் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேறியது.

புதுமணம் செய்து கொண்டோர் தவிரமற்ற பெண்கள் அனைவரும் நடப்பு ஆண்டில் தாய்மை அடையாமல் இருப்பதற்கான நடவடிக்கைகள் எடுப்போம் என்றும் அவர்கள் உறுதி எடுத்துக் கொண்டனர்.

தீர்மானங்களை முன்னிட்டு1985ஆம் ஆண்டை "குழந்தை பெறா" ஆண்டாக கொண்டாட வேண்டும் என்றும்தீர்மானிக்கப் பட்டது.

# மருத்துவக் கல்வியை நவீனப்படுத்த அரசு தீவிரம்

## அமைச்சர் அண்டே தகவல்

**சென்னை, பிப். 28- மருத்துவக்கல்வியை நவீனப்படுத்தும் திட்டம் நாடு பூராவும் அமுல் படுத்தப்படவிருக்கிறது. அதற்கு முன்னோடியாக இந்த திட்டம் தமிழகத்தில் முதலில் செயல் படுத்தப்படும் என்று அமைச்சர் அண்டே கூறினார்.**

அகில இந்தியாவிலும் மருத்துவக்கல்விமுறையை நவீனப்படுத்த மத்திய அரசு திட்டமிட்டுள்ளது. அதற்கான வழி வகைகளைகாண்பதற்கு மத்திய சுகாதார அமைச்சர் சங்கரானந்த் ஒரு குழுவை அமைத்துள்ளார்.

தமிழக மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் டாக்டர் அண்டே இந்தக் குழுவின் தலைவராக இருக்கிறார். பல மாநிலங்களின் பிரதிநிதிகளும் இந்தக் குழுவில் இருக்கிறார்கள்.

இந்தக்குழுவின் கூட்டம் சென்னை கோட்டையில் நடைபெற்றது. டாக்டர் நடராஜன், டாக்டர் லலிதா காமேஸ்வரன் மருத்துவமனை டீன்கள், மருத்துவ நிபுணர்கள் பலரும் இந்த கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

கூட்டம் முடிந்ததும் அமைச்சர் டாக்டர் அண்டே நிருபர்களிடம் கூறியதாவது:-

மருத்துவக் கல்வி முறையை சீர்திருத்த பல யோசனைகள் இந்தக் கூட்டத்தில் ஆராயப் பட்டன. பாடம் சொல்லிக் கொடுப்பதில் நவீன கருவிகள், தொலைக்காட்சிப் பெட்டிகள் போன்றவற்றை எப்படி பயன்படுத்துவது, புதிய பாடத்திட்டங்களை எந்த முறையில் கொண்டு வருவது, கிராமப்புற சுகாதாரம், மருத்துவமனை நிர்வாகம்போன்றபடிப்புகளை எப்படி சொல்லிக் கொடுப்பது முதலியவை பற்றியும்ஆராயப்பட்டது.

இந்த சிபாரிசுகளை அகில இந்திய அடிப்படையில் செயலபடுத்துவதற்கு முன்புதமிழ்நாட்டில்உள்ள மருத்துவக் கல்லூரிகளில் இதை செயல் படுத்தலாம் என்று முடிவு செய்யப் பட்டது.

டாக்டர் ராமமூர்த்தி டெல்லிக்குச் சென்று திட்டக்குழு அதிகாரிகளை கலந்து பேசினார்.

முதலில்இந்தத் திட்டங்களை தமிழ்நாட்டுக் கல்லூரிகளில் செயல் படுத்துங்கள் என்றும், அதற்குரிய செலவுகளை மத்திய திட்டக் குழு கொடுத்துவிடும் என்றும் சொல்லியிருக்கிறார்கள்.

இந்த சிபாரிசுகளை விரைவில் பல்கலைக் கழகம் மற்றும் இந்திய மருத்துவக்கவுன்சில் ஆகியவற்றின் ஒப்புதலுடன் தமிழகத்தில் செயல்படுத்த இருக்கிறோம்.

இவ்வாறு அமைச்சர் டாக்டர் அண்டேகூறினார்.